## பொருளடக்கம்

## அஞ்சலி

காலைக் கதிரை நிகர்த்தவளைக்
காண்போர் மனத்தைக் கவர்பவளை
மாலை சூட்டித் தாணுவையே
வரிந்து கொள்ள நிற்பவளை
கோல நடையுங் குறுஞ்சிரிப்பும்
குளிரக் கண்டு முனிவரெல்லாம்
சால வணங்க அருள்பவளைத்
தாயை நாளும் தியானிப்பாம்.

சாற்றுக்கவி

தசாவதானம்

பி. ஆறுமுகம் பிள்ளை

தென்னன் தமிழ்ச்சொல்லும்
　　தேக்குந் திருவாரும்
கன்னிப் பகவதியைக்
　　கண்டேனென்—றுன்னியிடும்
பத்தும் உமைதாணுப்
　　பாவலன் தந்தான்பா
சொத்துக் கிதுவெனவே சொல்.

# குமரிப் பத்து

## காப்பு

தேவி குமரிஉன் சேவடியைச் சேவித்துப்
பூவைச் சொரிந்துநான் பூசிப்பேன்–பாவமையப்
பாடிப் பரவியிடப் பாவில் தொடைநயங்
கூடிச் சிறக்கவருள் கூர்.

1. ஆலமுண்டோ னிடத்தாளை
   ஆதி யந்த மற்றவளை
   நீலத் திரையில் நிதம்முங்கி
   நிலையாய்த் தவங்கள் செய்பவளை
   தாலம் புகழ வருமாயன்
   தங்கை யாக வந்தவளை
   கோலம் பலவாய் நின்றவளைக்
   குமரித் துறையிற் கண்டேனே.

2. சாடும் அரக்கர் குலமழியத்
   தன்னே ரில்லாத் துணையுடனே
   ஆடுங் கடலில் அணைகட்டி
   அன்பாய்த் தொழுத ராமனுக்கு
   நாடும் வரங்கள் நயந்தவளை
   ஞாலம் புரக்கும் நாரணியை
   கூடுங் கடல்கள் மூன்றுஞ்சேர்
   குமரித் துறையிற் கண்டேனே.

3. கொதிக்கும் விண்ணோர் பதிக்கிரங்கிக்
   கொடிய துன்பம் துடைத்தவளை
   துதிக்கும் பொதிகை முனிக்கன்று
   தோன்றாத் துணையாய் நின்றவளை

மதிக்கும் மறையி னுட்பொருளாய்
மறைந்து நிற்கும் மாயவளை
குதிக்கும் அயிலைக் குருகுத்தும்
குமரித் துறையிற் கண்டேனே.

4. நாட்டைக் காக்கும் நாயகியை
நாளும் ஏத்தும் நற்பொருளை
வாட்டும் நோய்கள் ஒழிப்பவளை
வளரும் வாழ்வை அளிப்பவளை
பாட்டுக் குருகும் பார்ப்பதியை
பாசத் தளைக ளறுப்பவளை
கூட்டி முத்தை அலைகொழிக்கும்
குமரித் துறையிற் கண்டேனே.

5. அமரர்க் கபயம் அளித்தவளை
அல்லும் பகலு மானவளை
குமரர்க் கருள்கூர் குணவதியைக்
கொற்றம் நாட்டுங் கொற்றவையை
சமரில் வாணன் தலையந்நாள்
தரையி லுருளச் செய்தவளை
குமிறி யலைகள் மோதியெழும்
குமரித் துறையிற் கண்டேனே.

6. கூடும் விழாவிற் குகந்தவளைக்
கூறும் விளியிற் குதிப்பவளை
தேடற் கரிய செல்வத்தைத்
தெவிட்டா நல்ல தெள்ளமுதை
பாடற் கிசைந்த பகவதியைப்
பாவ மகற்றும் பைங்கிளியைக்
கோடிக் கரையைக் கொண்டவளைக்
குமரித் துறையிற் கண்டேனே.

---

*அயில் - ஒரு வகை மீன். குருகு - பறவை.

7. பாடும் பாவிற் குதிப்பவளைப்
பண்ணிற் கலந்து நிற்பவளை
தோடுங் குழையு முடையவளைத்
தொண்டர் நெஞ்சில் படர்கொடியை
ஈடு மெடுப்பு மில்லாளை
எங்கும் நிறைந்த சுந்தரியை
கூடுந் தீர்த்தம் பலசேரும்
குமரித் துறையிற் கண்டேனே.

8. ஒளிரும் வெள்ளி யம்பலத்தில்
ஒருங்கே ஆடும் உமையவளை
மிளிரும் கல்லின் முகப்பொலிவால்
விண்ணும் மண்ணும் வளைப்பவளை
ஒளிருங் கதிர்கள் முங்கிநிதம்
உலகம் அறியத் தொழுபவளை
குளிருந் தென்றல் குனித்துவரும்
குமரித் துறையிற் கண்டேனே.

9. முற்றுந் துறந்த ஞானிகளும்
முனியு மேத்தும் அம்பிகையை
வெற்றி மாலை புனைபவளை
வெறுப்பும் விருப்பும் இல்லாளை
உற்ற உருவில் ஒளிர்பவளை
உள்ளக் கமலத் துறைபவளை
குற்றம் பொறுக்குங் கொற்றவையை
குமரித் துறையிற் கண்டேனே.

10. பூத்த திரையின் முத்தாரம்
போற்றும் நடிப்பில் ஒவ்வொன்றும்
கோத்த முத்து ஆயிரமும்
கூடுஞ் சபையில் விழக்கண்ட

தாளம் = முத்தோர்

ஏத்தும் செல்வன் பராந்தகர்கோன்
இதயங் கவர்ந்த *நந்தனையின்
கூத்துக் கிசைந்த பகவதியைக்
குமரித் துறையிற் கண்டேனே.



* நந்தனை பகவதி நாச்சியாருக்குத் தட்டு விளக்கேந்தும் ஒரு இள யௌவனப் பெண். நாட்டியக் கலையில் கைதேர்ந்தவள். பராந்தகன் நாட்டியக் கலையில் ஆர்வமுடையவன், அவனது நடனத்தைக் காணத் திருவுள்ளங் கொண்டான். அதற்காக ஒரு திரை மண்டபம் எடுக்கப்பட்டது. ஆயிரம் முத்துகள் கோர்த்த ஒரு ஆரம் அங்கே தொங்க விடப்பட்டிருந்தது. நந்தனை நடனம் பிடித்தாள். அவளது நடனத்தின் ஒவ்வொரு தாளத்தின் எடுப்பிலும் ஒவ்வொரு முத்து வீதம் ஆயிரம் முத்தும் விழக் கண்ட பராந்தகன் வியந்தான். நடனக் கலையில் மனதைப பறிகொடுத்தான். நந்தனைக்குப் பட்டமும் பரிசுகளும் கொடுத்துப் பாராட்டினன். பாண்டியன் முன்னிலையிழ் நந்தனையின் நாட்டியக் கலை அரங்கேற்றப் பட்டது

## சாற்றுக்கவி

தசாவதானம்

பி. ஆறுமுகம் பிள்ளை

வெண்பா

கன்னிப் பகவதியைக்
    கண்டஞ் சலிசெய்ய
உன்னி யுருகும்
    ஒருநூலை—இந்நிலத்தார்
உள்ளப் பகர்ந்தான்
    உமைதாணு நற்கவிஞன்
வெள்ளக் கவியால் வியந்து.

# குமரி அஞ்சலி

## காப்பு

சித்திதரும் புத்திதரும் தென்குமரித் தேவியைப்
பக்தியுடன் பண்ணமையப் பாடிடவே-சத்திதரும்
தாணு விநாயகா சாருங் குறைபெவருங்
காணுமல் காத்தல் கடன்

1. கன்னி பகவதியே—உன்னிரு
காலைப் பிடித்திடுவோம்
உன்னுங் குணமெல்லாம்—ஒன்ருய்
ஓங்கி வளர்ந்திடவே.

2. எண்ணுக் கடங்காவே—உனது
ஈடு மெடுப்புமெல்லாம்
நண்ணும் வரமருள் நீ—வாழியென
நாளுந் துதித்திடுவோம்.

3. வெற்றி தருந்தாயே—உனது
வீரத்தினைப் புகழ்வோம்
சுற்றி வரும்பகையைத்—தொலைக்கத்
துள்ளி எழுந்திடுவாய்.

4. பண்ணிற் கலந்திடுவாய்—பாடும்
பாவிற் குதித்திடுவாய்
எண்ணும் பொருள்களிலே—தேவி நீ
எங்கும் நிறைந்திடுவாய்.

5. வாணனை மாய்த்திடவே—கொண்ட
வடிவத்தினைப் புகழ்வோம்
தாணுவை மாலையிடத்—தவஞ்செய்யுந்
தாயே எமக்கருள்வாய்.

6. மாயப் பிறப்பொழிக்கும்—குமரி உன்
மலரடியைத் தொழுவோம்
மாயன் தங்கையாகி—இந்த
மாநில மாள்பவளே.

7. சித்திதரும் மகளைக்—காக்கும்
சிவகாம சுந்தரியை
நித்தம் பணிந்திடுவோம்—நெஞ்சில்
நிலையாய் வைத்திடுவோம்.

8. ஊக்கந் தரும் மகளை—உருவெழ
உள்ளே உறைத்திடுவோம்
ஆக்க மெலாந்தருவாள்—அவளருள்
அண்ட மெலாமாளும்.

9. மூக்கணி முத்தொளியால்—இருளை
முற்றுந் துடைப்பவளே
காக்குமுன் கழலடியே—கதியென
கரங்கள் கூப்புகின்றோம்.

10. பாதச் சிலம்பொலியைக்—கேட்கப்
பாடிப் பரவுகின்றோம்
வேதப் பொருளாக—விளங்கும்
விரும்பும் மெய்ப்பொருளே.

## சாற்றுக்கவி

தசாவதானம்

பி. ஆறுமுகம் பிள்ளை

வெண்பா

நற்சொற் றசாங்கமென
நாடும் உமைதாணு
சொற்சித் திரங்காணச்
சொல்லினன்—பொற்செய்
வருந்தேரூர் வாழ்வோன்
வளமாருங் கன்னி
அருந்தேவி யங்கம் அமைத்து.

# குமரித் தசாங்கம்

### காப்பு

தென்குமரித் தேவி திருத்தசாங் கம்பாட
அன்பருளந் தங்கியருள் ஐங்கரனே—இன்பம்
தரும்பொருளும் யாப்பும் தமிழ்வளமும் பாவில்
அருமையாய் வாய்க்க அருள்.

### 1. நாமம்

பேசும் இளங்கிள்ளாய் பேர்பெற்ற எம்மிறைவி
ஆசைத் திருநாமம் ஆய்ந்துரையாய்—மாசகற்றி
பன்னரிய ஞானம் பயக்குந் தவச்செல்வி
கன்னிக் குமரியே காண்.

### 2. நாடு

ஆடுங் கிளையமரும் அஞ்சுகமே எம்தேவி
நாடி நிதமருள்வாள் நாடுரையாய்—தேடரிய
தென்னர் புறத்தாய செந்தமிழ் நாடென்றே
உன்னுள் நிலையா யுணர்.

### 3. பதி

இன்பமெழக் கொஞ்சும் இளங்கிள்ளாய் எம்செல்வி
மன்புவியி லெந்நாளும் வாழ்பதியென்—தென்பால்
குமிறி யலையெறியும் கொண்டல் முகக்கும்
குமரிப் பதியென்றே கூறு.

## 4. மலை

எங்கும் மழைலபயில் என்றன் பசுங்கிளியே
மங்கை மருவு மலையுரையாய்—தங்கும்
இருளகற்றித் தாரணியில் இன்பமிகு முத்தி
யருளும் மருத்துமலை யாம்.

## 5. ஆறு

செம்பவளச் செவ்வாய்ச் சிறுகிளியே சிந்தையுறை
அம்புவி யாளுமவள் ஆறுரையாய்—வம்புதரு
ஈனந் தருமலம் எல்லாங் கழுவவெழு
ஆனந்தப் பஃறுளியாம் ஆறு.

## 6. கொடி

சீலமிகுச் சின்னஞ் சிறுகிளியே எம்குமரி
கோலமெழக் கொள்ளும் கொடிகூறாய்—தாலமிசை
அள்ளும் அமைதியெங்கும் ஆக்கமுறத் தங்கிடவே
கொள்ளுங் கலையே கொடி.

## 7. படை

நாவினால் சொக்க நனிபேசும் அஞ்சுகமே
தேவிகை யேந்துபடை செப்பிடுவாய்—பூவுலகைச்
சீலமுடன் காத்தருளச் செங்கரந் தாங்கிவரும்
சூலமவள் நற்படையாய்ச சொல்.

## 8. பறை

என்புருகப் பேசும் இளந்தத்தாய் எம்மிறைவி
முன்பால் முழங்கும் முரசியம்பாய்—அன்பாய்க்கேள்
எத்தினமும் மாறாத இன்பத்தில் மூழ்குவிக்கும்
முத்திதரும் நாத முரசு.

## 9. ஊர்தி

சீருயரும் செல்வச் சிறுகிளியே எம்மன்னை
ஊரும் புரவி உரைத்திடுவாய்—பாரெங்கும்
என்புருக ஏத்தி இசையெழப் பாடிவரும்
அன்பரக மாவென்றே ஆய்.

## 10. தார்

தீங்கனிக ளாயும் சிறுகிளியே எம்செல்வி
தாங்குமவள் மார்பணியும் தார்உரையாய்—பாங்கசையும்
வெற்றிதரு வாகை மிளிரும் மணிமாலே
கொற்றவையாள் தார்என்றே கூறு.

## சாற்றுக்கவி

தசாவதானம்
பி. ஆறுமுகம் பிள்ளை

வெண்பா

தென்னெல்லை காத்தருளும்
தேவி அடிபோற்றி
தென்குமரித் தாலாட்டைச்
செய்தனஞல்—மன்புவியில்
பேராருஞ் சீருடையான்
பேசரிய பண்டிதன்
தேரூர் உமைதாணு தேர்ந்து.

## குமரித் தாலாட்டு

1. மூவரையும் பயந்தவளே
 மூவுலகும் ஆள்பவளே
தேவரையுந் தந்தவளே
 சிவகாமி தாலேலோ.

2. சிற்றம்பலத் தானுடனே
 தினமாடிக் களிப்பவளே
குற்றங்கள் பொறுத்தருளும்
 குணக்குன்றே தாலேலோ.

3. சீராகப் பண்கூட்டித்
 தினம்பணிவோர்க் கருள்புரியும்
பாராளும் பைங்கிளியே
 பார்ப்பதியே தாலேலோ.

4. நம்பியுன்னைத் தாழ்வோர்க்கு
 நற்பதத்தை நயந்தருளும்
அம்பிகையே அயிராணி
 ஆனந்தி தாலேலோ.

5. தஞ்சமெனத் தாழ்ந்தவரின்
 சஞ்சலங்கள் ஒழிப்பவளே
அஞ்சனியே பஞ்சமியே
 அபிராமி தாலேலோ.

6. தாணுவை நோக்கிநிதம்
 தவஞ்செய்யும் பகவதியே
பூணுமணி பூண்பவளே
 பூரணியே தாலேலோ.

7. வந்தனைகள் செய்வார்க்கு
வரமருளும் மாயவளே
நந்தனைக்கன் றருள்பூத்த
நாராயணி தாலேலோ.

8. வண்ணமயி லேறிவரும்
மால்மருகைப் பயந்தவளே
நண்ணுபதம் தந்தருளும்
நாயகியே தாலேலோ.

9. தென்னவர்தம் குலங்காத்த
தெவிட்டாத தெள்ளமுதே
தன்னேரில் லாதவளே
சண்டிகையே தாலேலோ.

10. மன்னர்மன் பராந்தகர்கோன்
மனக்கோயில் கொண்டவளே
என்னுடைய இன்னமுதே
என்தாயே தாலேலோ.

11. திருவளரச் செயம்வளரத்
தினமருளுந் திரிபுரையே
உருவின்கண் ஒளிர்பவளே
உமையவளே தாலேலோ.

12. தேவரையும் அசுரரையும்
திசைகளையும் படைத்தவளே
பூவுலகைக் காத்தருளும்
புராதனியே தாலேலோ.

13. தேவகிதன் மடிமீதில்
திருமகவாய் வளர்ந்தவளே
பூவுலகைக் காத்தருளும்
பூரணியே தாலேலோ.

14. வசுதேவர் புத்திரியாய்
மாயமாய் வந்தவளே
அசுரரை அழித்தவளே
அபிராமி தாலேலோ.

15. முத்தார முடன்பவளம்
முன்னெழுந்து வருணதேவன்
இத்தசையில் உனக்களித்தான்
எண்டோளி தாலேலோ.

16. ஈடில்லா ரத்தினங்கள்
இழைத்திட்ட பொன்தொட்டில்
நாடியிந் திரனளித்தான்
நாயகியே தாலேலோ.

17. மாயா சொரூபியாகி
வாணனுயிர் மாய்த்தவளே
தாயாகிச் சுரந்தருளும்
சாம்பவியே தாலேலோ.

18. வாணியன்றன் மாமியாக
மண்ணுலகில் வந்தவளே
தாணுஇடங் கொண்டவளே
சாமுண்டி தாலேலோ.

19. மாட்டிடைய னுடன்பிறந்த
மாலினியே வல்லபியே
காட்டிடையே ஆடுகின்ற
கங்காளி தாலேலோ.

20. மன்னுதவக் கோலமுடன்
மலையாளி வரவுக்காய்
கன்னிகையாய் நின்றருளும்
காத்தவளே தாலேலோ.

21. கன்மவினை அணுகாமல்
காத்தருளும் கல்யாணி
சென்மப்பிணி நீக்கியருள்
தென்குமரி தாலேலோ.



## சாற்றுக்கவி

தசாவதானம்

பி. ஆறுமுகம் பிள்ளை

### வெண்பா

விற்பனர்கள் மெச்ச
விதவிதமாய்க் கீர்த்தனைகள்
அற்புதமாய்ப் பாடி
அணிசெய்வோன்—நற்புகழோன்
பாவினிக்கப் பன்னும்
உமைதாணுப் பாவலன்
நாவினிக்கச் சொல்லுவான் நன்கு

# குமரிக் கீர்த்தனைகள்

## 1

## இன்னும் இரங்கவில்லை

### பல்லவி

இன்னும் இரங்க வில்லையடி—தோழி
இனிநான் என்ன செய்வேனடி (இன்னும்)

### அனுபல்லவி

தென்னைகள் சூழும்
தென் சுசிந்தைப் பதியார்
என்னை மாலையிட
என்தவம் நிலைகொள்ள (இன்னும்)

### சரணம்

இந்திரன் தவத்திற் கிரங்கி
இன்னருள் செய்தான்
சந்திரன் தவத்திற் கிரங்கித்
தலைமேல் தாங்கினான்
சுந்தரன் பகீரதன்
துன்பமெல்லாம் போக்கினான்
மந்திரப் பொருளாம்
மறைபொருளாம் மன்னுந் தாணு
(இன்னும்)



கோயிலும் பார்வையாளர் தங்குமிடமும்

2

## சாடை தெரிந்து செல்

### பல்லவி

சாடை தெரிந்து செல்லடி—சென்று
தாணுவிடம் எல்லாம் சொல்லடி (சாடை)

### அனுபல்லவி

ஆடும் அரவு சூடி
அம்பலத்தே ஆடுகின்ற
தோடுடைய செவியனைத்
தொங்குஞ் சடையனை (சாடை)

### சரணம்

கண்டங் கறுத்தானை
கண்மூன் றுடையானை
அண்டும் அடியார்கள்
அல்லல் ஒழித்தானை
எண்டிசை போற்ற
ஏறுகந் தானை
அண்டி யென்றன்
அல்லலெல்லாம் அகற்ற (சாடை)

3

# ஏளனஞ் செய்குதடி

### பல்லவி

ஏளனஞ் செய்குதடி
இரைகட லென்னை (ஏளனஞ்)

### அனுபல்லவி

நாளுமென் தவம்நோக்கி
நம்பும் என் நிலைநோக்கி
ஆளுமவர் உளம் நோக்கி
அல்லும் பகலும் நோக்கி நோக்கி
(ஏளனஞ்)

### சரணம்

காலை வருவேனென்றார்
கடந்தால் மாலை வருவேனென்றார்
கணக்கிலா காலையும் மாலையும்
கடந்து விட்டதேயடி
மாலை மதியமும் வசந்த தென்றலும்
மாறி மாறி வதைக்குதேயடி
வாழவகை தெரிந்தெனக்கோர்
வழியை நீதான் சொல்லடி (ஏளனஞ்)

4

# என்ன உறவு

### பல்லவி

என்ன உறவு நெஞ்சே
ஈரமில்லா ரோடே (என்ன)

### அனுபல்லவி

சொன்ன சொல்லைவிட்டு
தோன்றிய படியே செய்யும்
செந்நெற் கழனி சூழும்
தென்சுசிந்தைப் பதியாரிடம் (என்ன)

### சரணம்

கல்லால் எறிபட்டான்
காற்செருப்பா லுதைபட்டான்
வில்லால் இடிபட்டான்
பிரம்பா லடிபட்டான்
சொல்லால் கீரனுடன்
மன்றில் மாறுபட்டான்
எல்லாரும் நல்லா னென்
றேத்தும் அவருடன் (என்ன)

5

# கருணை செய்வாய்

### பல்லவி

கன்னியா குமரித் தாயே
கருணை செய்வாய் நீயே (கன்னி)

### அனுபல்லவி

உன்னடியே தஞ்சமல்லால்
ஒருதுணை எனக்கில்லையே (கன்னி)

### சரணம்

மின்னும் மூக்குத்தி
முத்தின் ஒளியும்
விளங்கிடை சேர்த்த
அரைப்பட்டை எடுப்பும்
பின்னும் வார்குழல்
சுட்டிப் பொலிவும்
பேசும் சிலம்பும்
தோடுஞ் சூடும் (கன்னி)

6

## வரம் அருள்வாய்

பல்லவி

வேண்டும் வரமருள்வாய்—எனக்கு
வேண்டும் வரமருள்வாய் (வரம்)

அநுபல்லவி

ஈண்டு பிறவாமல்
இளைத்து நரையாமல்
என்றும் உன்னடியை
ஏத்தி உய்ந்திட (வரம்)

சரணம்

ஓதும் மறையும்நீ
உருவும் அருவும்நீ
உயிருக் குயிரும்நீ
உலகம் யாவும்நீ
ஆதி முதல்விநீ
அழியாப் பொருளும்நீ
அனைத்து மேயான
ஆனந்த ரூபினி (வரம்)

7

# குறை பொறுத்தருள்

பல்லவி

குறைபொறுத் தருள்வாய்
குணப்பெருங் கடலே (குறைபொறுத்)

அனுபல்லவி

மறைபயில் பொருளே
வானவர் நிதியே
கறைமிட றுடையான்
கன்னிப் பகவதியே (குறைபொறுத்)

சரணம்

ஆசை வெறியாலே
ஆடித் தளர்ந்துவிட்டேன்
அன்பை மறந்துவிட்டேன்
அறிவைத் துறந்துவிட்டேன்
காசுக் கள்ளனுகக்
கடைவழி சென்றுவிட்டேன்
கதிநீ எனஉன்றன்
கழலடி பணிந்துவிட்டேன்
(குறைபொறுத்)

8

# எங்கே தேடுவேன்

பல்லவி

எங்கே தேடுவேனடி—தோழி
எங்கே தேடுவேனடி (எங்கே)

அனுபல்லவி

கங்கை சூடியவரைக்
கண்மூன் றுடையவரை
அங்கையில் அனலேந்தி
அம்பலத் தாடுமவரை (எங்கே)

சரணம்

மங்கைக்காய் தூதுசென்ருரோ
மன்றில் வாதமிடுகின்ருரோ
அங்கையில் விஷமேந்தி
அருந்தவே நிற்கின்ருரோ
செங்கையில் பிரம்படியைத்
திருந்தவே ஏற்கின்ருரோ
அங்கை கூப்புமடியார்க்கு
அருள் பாலிக்குமவரை (எங்கே)

9

# நித்தம் பணிவேன்

பல்லவி

நித்தம் பணிவே னம்மா—உன்னடியை
நித்தம் பணிவே னம்மா (நித்தம்)

அனுபல்லவி

சித்தம் இரங்கித்
தினமருள் புரியும்
தில்லை யீசன்
சிவகாம சுந்தரியே (நித்தம்)

சரணம்

எத்தனை எத்தனையோ
கொடுமைக் காளானேன்
இன்னும் எத்தனை
எத்தனையோ அறியேன்
முத்தி தந்தருள்செய்யும்
முக்கண்ணன் தேவி
மூவுலக நாயகி
உன்னடியைப் பாடி (நித்தம்)

## 10

# வாழவரம்

பல்லவி

வாழவரம் வேண்டுவனே—உன்னிடம்
வாழவரம் வேண்டுவனே (வாழவரம்)

அனுபல்லவி

தாழும் அடியார்க்குத்
தண்ணருள் பாலிக்கும்
ஏழை பங்காளி
எண்டோளி சாம்பவி (வாழவரம்)

சரணம்

தோழனுய் யாவர்க்குந்
தொண்டுகள் செய்திட
வாழுங் கலையின்
வளங்கள் குவித்திட
தாழும் நாளெல்லாம்
தமிழிசைச் சாற்றிட
நீழும் நாளெல்லாம்
நேசம் வளர்த்திட (வாழவரம்)

11

# அன்னே பவானி

பல்லவி

அன்னே பவானி
அருள்செய் வாய்நீ (அன்னே)

அனுபல்லவி

உன்னே யல்லால்
ஒருதுணே யில்லே
ஊரும் பேரும்
உறவும் சதமில்லே (அன்னே)

சரணம்

முன்னே முளேத்த
மூவா முதலே
முப்புர மெரித்த
முக்கண்ணன் தேவி
தன்னே ரில்லாத்
தாணுவை நாடி
தவஞ்செய்யும் தாயே
சக்தி உமையே (அன்னே)

12

# எவ்விடந் தேடுவேன்

பல்லவி

எவ்விடந் தேடுவேனடி—தோழி
என்னுள்ளங் கவர்கள்வனை (எவ்விடம்)

அனுபல்லவி

இவ்விடம் வரவே
இன்னுந் தாழ்த்தியவனை
வெவ்விடம் உண்டவனை
விண்ணவர் அமுதை (எவ்விடம்

சரணம்

வில்லாக மேருவை
வளைக்கச் சென்றாரோ
விறகு விற்றிட
வீதியில் நின்றாரோ
கல்லானைக் கூட்டவே
கரும்பைக் கண்டாரோ
காமனைக் காய்ந்திடக்
கருதி நின்றாரோ (எவ்விடம்)

13

# தஞ்சம் நீயே

பல்லவி

தஞ்சம் நீயே அம்மா—எனக்குத்
தண்ணருள் பாலிப்பா யம்மா (தஞ்சம்)

அனுபல்லவி

வஞ்சனி பஞ்சமி
வல்லபி மாலினி
அஞ்சனி ஆரணி
ஆனந்த ரூபிணி (தஞ்சம்)

சரணம்

இனப் பித்தாலே இறுமாந்து விட்டேன்
தனப் பித்தாலே தவறுகள் செய்துவிட்டேன்
மனப் பித்தாலே மதி கெட்டுவிட்டேன்
உனது பித்தாலே உன்னடி தாழ்ந்தஎனக்கு
(தஞ்சம்)

14

## நாடும் வரம்

பல்லவி

நாடும் வரமிதுவே—நான்
நாடும் வரமிதுவே (நாடும்)

அனுபல்லவி

பாடிப் பரவியிட
பாமாலை சூட்டிட
நாடி உனதடியை
நாளுந் தொழுதிட (நாடும்)

சரணம்

கோடிக் கரைமேவுங்
குமரிப் பகவதியே
குற்றங் குறைபொறுக்கும்
குணப்பெருங் குன்றே
நீடு தவஞ்செய்யும்
நீலி மனோன்மணி
நீல கண்டன்தேவி
நித்திய கல்யாணி (நாடும்)

15

# அஞ்சலி செய்வோம்

பல்லவி

அஞ்சலி செய்வோமே
நெஞ்சி லிருத்தியே (அஞ்சலி)

அனுபல்லவி

அஞ்சுக மொழியாளை
அச்சுதற் கிளையாளை
விஞ்சை விரிகடலை
வேத உட்பொருளை (அஞ்சலி)

சரணம்

தஞ்சமென வந்தவர்க்குத்
தாயாகி அருள்செய்யும்
சண்டிகையை சாம்பவியை
தன்னேரில் லாதவளை
நெஞ்சிருத்தி அவள் நாமம்
நீங்காம லுச்சரித்து
நெக்குநெக் காயுருகி
நித்தமவள் புகழ்பாடி (அஞ்சலி)

16

## நம்பி வந்தேன்

பல்லவி

நம்பி வந்தேனம்மா—நானுன்னை
நம்பி வந்தேனம்மா (நம்பி)

அனுபல்லவி

நம்பனிடங் கொண்டவளே
நாராயன் தங்கையே
அம்புவியை ஆள்பவளே
அன்னையே உன்னையே (நம்பி)

சரணம்

மாய வாழ்வை
மாயா வாழ்வெனவே
நாயேன் நம்பி
நடந்து விட்டேன்
சேயா யென்னைத்
தெரிந்து நோக்கி
தாயா யிரங்கி
யருள்வா யெனவே (நம்பி)

## 17

# துதி செய்வேன்

பல்லவி

துதிசெய் வேனம்மா—என்றும்
துதிசெய் வேனம்மா (துதிசெய்)

அனுபல்லவி

கதிநீ யே அல்லால்
கண்ட தொன் றில்லை
பதிபா கங் கொண்ட
பரமேஸ்வரி உன் பாதம் (துதிசெய்)

சரணம்

நிதியும் எனக்கில்லை
நிலமும் எனக்கில்லை
நித்தம் உனதடியை
நெஞ்சுருகப் பாட
கதியுடன் தாளம்
கானம் அமைய
கவிமா ரிபொழிய
கடைக்கண் ணருள (துதிசெய்)



காந்தி மண்டபம்

## சாற்றுக் கவி

தசாவதானம்

பி. ஆறுமுகம் பிள்ளை

வெண்பா

பக்திச் சுவைசொட்டப்
　　பாடும் உமைதாணு
சொக்கப் பதிகங்கள்
　　சொல்லினனுல்—எக்காலும்
செந்தமிழ்ச் செல்வனவன்
　　சீரோங்கி வாழ்ந்திடக்
கந்த னருளக் கனிந்து

## தலப் பதிகங்கள்

### 1. கன்னியா குமரி

மாயவளை வணங்கா
வம்பர் களுக்கெல்லாஞ்
சேயவளைத் தவஞ்செயத்
தென்கோ டிக்கரையில்
மேயவளை வேண்டும்
வரங்கள் தந்தருளுந்
தாயவளைச் சரண்புகு
வாய்என் மடநெஞ்சே

### 2. சுசீந்திரம்

மங்கை யிடறிபாற் குடத்தை
மறிக்கச் செய்த வேய்முளையை
நங்கை கணவன் கோடரியால்
நணுகி வளைத்துத் தறிக்குங்கால்
பொங்குங் குருதி கண்டஞ்சிப்
பொறிகள் நடுங்க அருள்பூத்த
மங்கை பங்கன் மலரடியை
மனத்தி லிருத்தி வணங்குவாம்

சடையானைத் தண்மதி
கங்கை யரவும்
உடையானை உளம்பூண்
டம்பலத் தாடும்
நடையானை நற்சுசிந்
தைமேவும் வெள்ளை
விடையானை யல்லால்
விழைவதென் நெஞ்சே

## 3 மருங்கூர்

குன்றம் எறிந்தவனைக்
குளிர்திரைக் கடலில்
நின்றம் மாசூரை
நிலைகுலைத் தவனை
மன்றம் முழங்கதமிழ்
தந்தவனை மருங்கைக்
குன்றங் கொண்டவனைக்
குறிக்கொள் நெஞ்சே !

## 4. திருவண்பதிசாரம்

குடையானைக் கோகுலங்
காத்தவனைச் சக்கரப்
படையானை பையரா
வலியடங்க ஆடும்
நடையானை நற்றிரு
வண்பதி சாரம்
உடையானை யல்லால்
உள்ளதென் நெஞ்சே

## 5. திருவட்டாறு

மாயவனை மறையெலாம்
ஆனவனை எவ்வுயிர்க்குந்
தாயவனைத் தயிர்பா
லுண்டுமத் தடிபட்ட
ஆயவனை அணிசேர்
திருவட்டாற் றின்கரையில்
மேயவனை யல்லால்
வேண்டுவ தென்நெஞ்சே

## 6. வேள்விமலை

ஆடும் மயிலானை
　　அமரர் குலக்கொழுந்தைக்
கூடும் பெருமானைக்
　　குறக்குல வள்ளியுடன்
ஊடும் உளத்தானை
　　வேள்வி மலைமேவி
வீடுந் தருவானை
　　யல்லால் விழைவதென்னே

### பயன்

கோடிக் கரையைக் காத்தருளும்
குமரித் தேவி அஞ்சலியைப்
பாடிப் பரவப் பக்தியுடன்
பரிந்து கேட்கும் நாளெல்லாம்
நாடும் நாட்டங் கைகூடும்
ஞாலம் விட்டு ஒடுங்குங்கால்
தேடக் கிடையாக் கயிலேயிலே
சேர்வார் சிவன்ருள் திடமாமே.

# வழிபாட்டுக் காலங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | விஸ்வருப தரிசனம் | காலை | 4–30 |
| 2. | அபிஷேகம் | ,, | 5–00 |
| 3. | உஷா பூசை | ,, | 6–30 |
| 4. | பாந்தீராடி பூசை | ,, | 8–00 |
| 5. | நாவகம் பூசை | ,, | 9–00 |
| 6. | உச்சிக்கால அபிஷேகம் | ,, | 10–00 |
| 7. | உச்சிக்கால பூசை | ,, | 11–30 |
| 8. | அலங்கார தரிசனம் | மாலை | 5–30 |
| 9. | சாயங்கால தீபாராதனை | ,, | 6–30 |
| 10. | அர்த்த யாமம் | ,, | 8–30 |
| 11. | ஏகாந்த தீபாராதனை | ,, | 8–45 |

1. தங்கும் இடம் வேண்டுவோர் தேவஸ்தான நிர்வாகிகளிடம் விசாரிக்கவும்.

2. அபிஷேகப் பன்னீர், அர்ச்சனை குங்குமம் தேவஸ்தானத்தில் விலைக்குக் கிடைக்கும்.

## தினப்பலன்: ஓரையும்—கௌரியும்—முக்குணமும்

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு ... | சுக்கிரன் அமுதம் 7–8 சாத்துவிகம் 7-30—8 | சந்திரன் 9—10 | குரு லாபம் 11—12 | எமகண்டம் 12—1-30 | சுக்கிரன் 2—3 சுகம் | சந்திரன் 4—4-30 | இராகு காலம் 4-30—6 |
| திங்கள் ... | சந்திரன் 6—7 அமுதம் சாத். 6—7 | இராகு காலம் 7-30—9 | எமகண்டம் 10-30—12 | சந்திரன் 1—2 1—1-30 தனம் | குரு 3—4 சாத்துவிகம் 3—4 | சுக்கிரன் 6—7 சுகம் | சந்திரன் 8—9 சாத்துவிகம் 8—9 |
| செவ்வாய் ... | சுக்கிரன் 8—9 லாபம் | எமகண்டம் 9—10-30 | சந்திரன் 10-30—11 சுகம் | குரு 12—1 | இராகு காலம் 3—4-30 | சந்திரன் 5—6 அமுதம் | குரு 7—8 |
| புதன் ... | சந்திரன் 7—7-30 லாபம் | எமகண்டம் 7-30—9 | குரு 9—10 சுகம் | இராகு காலம் 12—1-30 | சந்திரன் 2—3 | குரு 4—5 அமுதம் 4—4-30 | சுக்கிரன் 7—8 அமுதம் 7—7-30 |
| வியாழன் ... | எமகண்டம் 6—7-30 | சுக்கிரன் 9—10 | சந்திரன் 11—12 சாத். 11-12 | குரு 1—1-30 அமுதம் | இராகு காலம் 1-30 – 3 | சுக்கிரன் 4-5 லாப. 4-4-30 சாத். 4-4.30 | சந்திரன் 6—7 அமுதம் |
| வெள்ளி | சுக்கிரன் 6—7 சுகம் | சந்திரன் 8—9 | குரு 10—10-30 சாத்துவிகம் 10—10-30 | இராகு காலம் 10-30—12 | சுக்கிரன் 1—2 அமுதம் 1—1-30 | எமகண்டம் 3—4-30 | குரு 5—6 தனம் |
| சனி ... | குரு 7—8 சாத். 7-30-8 | இராகு காலம் 9—10-30 | சுக்கிரன் 10-30—11 அமுதம் | சந்திரன் 12—1 சாத். 12—1 | எமகண்டம் 1-30—3 | சுக்கிரன் 5—6 சுகம் | சந்திரன் 7-7-30 லாபம் சாத். 7-30—8 |

இராகுகாலம் எமகண்டம் நீங்கலாக, இதனில் குறித்த உத்தம காலங்களில் ஸ்ரீ பகவதி அம்பாளை தியானித்துச் செயல்களில் இறங்கினல், எல்லாம் அனுகூலமாம். [சாத் என்று குறிப்பிட்டதெல்லாம் சாத்துவிகம்]

